# கிருஷ்ணன் - குறும்புக்கார வெண்ணெய்த் திருடன்



- இந்திரா ஸ்ரீவத்ஸா

நீண்ட காலத்திற்கு முன்பு, கிருஷ்ணன் என்ற சிறுவன் வாழ்ந்து வந்தான். அவன் பசுக்களைக் கவனித்துக் கொண்டு, பல வேலைகளைச் செய்தான்.

அவனுக்கும் வேடிக்கையாக இருப்பது பிடித்திருந்தது. ஆனால் சில சமயங்களில் வேடிக்கையாக இருப்பது அவனுக்கு சிக்கலில் முடிந்தது.



அவனது ஐந்தாவது பிறந்தநாளில், கிருஷ்ணனின் தாயார் யசோதா, அவனை ஒரு வேலை செய்யச் சொன்னார்.



"ஓடிப்போன கன்றுக்குட்டியை விரைந்து கொண்டு வா" என்று அவள் அவனிடம் சொன்னாள்.

கிருஷ்ணன் கன்றுக்குட்டியைக் கண்டுபிடிக்க வயல்களுக்குச் சென்றான். அவன் அவளை பார்த்தவுடன், அவளைப் பிடிக்க ஓடினான்.

கன்று, மிக வேகமாக ஓடினாள். அவள், அவன் கைகளின் வழியாக நுழைந்து ஓடினாள்.



கிருஷ்ணன், ஒரு புதிய திட்டத்தை முடிவு செய்தான். கயிறு மூட்டையால், கிருஷ்ணன் கன்றின் கால்களைக் கட்ட முயன்றான்.

கன்று எட்டி உதைத்துவிட்டு மீண்டும் குதித்து தப்பினாள். அவள் வீட்டை நோக்கி ஓடினாள். கிருஷ்ணன் அவளைத் துரத்தினான்.





கிருஷ்ணன் இறுதியாக கன்றுக்குட்டியை முற்றத்தின் வாசலுக்கு அருகில் பிடித்தான்.

மிகவும் முயன்று, அவளை முழு பலத்துடன் தள்ளினான். இறுதியாக, கன்று கதவு வழியாக முற்றத்தில் நுழைந்தாள்.

“என்னிடம் கன்று இருக்கிறாள்” என்று கிருஷ்ணன் கூவினான். அப்போது, அவன் புதிய வெண்ணெய் வாசனையை சுவாசித்தான்.



உள்ளே சென்று பார்த்தபோது, ஒரு வெண்ணெய் பானை தென்பட்டது. அது கூரையின் மேல் தொங்கிக் கொண்டிருந்தது. "எனக்கு வெண்ணெய் பிடிக்கும்!" என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.

அவன் திடீரென்று கன்றுக்குட்டியை மறந்துவிட்டான். அவன் நினைத்ததெல்லாம் இனிப்பு வெண்ணெய்தான்.

கிருஷ்ணன் தன்னால் இயன்ற உயரத்தில் குதித்தான். வெண்ணெய் பானை எட்ட முடியாத அளவுக்கு உயரமாக இருந்தது.



“என்னிடம் ஒரு ஏணி இருந்தால், மேலே ஏற முடியும்", என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். “ஒரு குச்சி இருந்தால் அதை உடைக்க என்னால் முடியும்". ஆனால் ஏணியோ, குச்சியோ கண்ணில் தென்படவில்லை.

அப்போது, கிருஷ்ணனிற்கு கன்றுக்குட்டியின் நினைவு வந்தது.





கிருஷ்ணன் கன்றுக்குட்டியை வீட்டுக்குள் உள்ள வெண்ணெய் பானையின் கீழே தள்ளினான். அவன், அவள் முதுகில் ஏறினான். ஒரு பெரிய பாய்ச்சலுடன், அவன் வெண்ணெய் பானையைப் அடைந்தான்.

கிருஷ்ணன் பானையுடன் தொங்கியபோது, கன்றுக்கு தப்பிச் செல்ல நேரம் வந்தது. அவள் விலகி நடந்தாள்.



கிருஷ்ணணின் கூக்குரல் கேட்டு யசோதா முற்றத்திற்கு வந்தாள். அவன் என்ன செய்தான் என்பது அவளுக்கு உடனே தெரிந்தது.

"கிருஷ்ணா, நீ மிகவும் குறும்புக்காரன்!" என்று யசோதா திட்டினாள். "நீ எப்போதும் குறும்பு செய்கிறாய்!"



"என்னை கீழே இறக்கு!", என்று அவன் கெஞ்சினான்.

“நான் உன்னை நாள் முழுவதும் அங்கேயே தொங்க வைக்க வேண்டும்!", என்று யசோதா கூறினார். அவள் கோபமாக இருந்தாள், ஆனால் அவள் கிருஷ்ணனை வெண்ணெய் பாத்திரத்தில் இருந்து கீழே இறக்க உதவினாள்.



யசோதா, அவன் பிறந்தநாளுக்கு, கொஞ்சம் வெண்ணெய்யை சாப்பிட வைத்தாள். அதற்கு காரணம் யசோதா கிருஷ்ணாவை மிகவும் விரும்பினாள்.

இந்து மக்களுக்கு கிருஷ்ணன் ஒரு சிறந்த கடவுள். மேலும்!, அவன் ஒரு குறும்புக்கார வெண்ணெய்த் திருடன்!